# திருநெல்லை

ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி - தை - 2017 - ஜனவரி

12.01.2017 அன்று சனாதன தர்ம உலகப் பல்கலைக்கழக அறநிலை சார்ந்த கல்வி நிறுவனங்களால் நடத்தப்பெற்ற சமத்துவப் பொங்கல்விழா

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

துன்முகி – தை – 2017 – ஜனவரி இதழ் – 55

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய சௌந்தர்",
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| 1. | ஆசியுரை | 2 |
| 2. | சித்த ஞானம் | 4 |
| 3. | பட்டினத்தார் பைந்தமிழ் | 8 |
| 4. | மடாலய நிகழ்வுகள் | 12 |
| 5. | அதிமதுர கவிகள் | 16 |
| 6. | திருக்குறள் | 20 |
| 7. | திருவிளையாடற் புராணம் | 23 |


தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**




உ
சிவமயம்

# இறை வணக்கம்

புயல்சுமந்த மேகமெனப் பொலிகின்ற குழலாளே
பூங்கமல வாவிபுடை சூழ்ந்த தாகிப்
பொலிகின்ற சமிவனத்தின் பொன்மயிலே அம்பலத்தான்
பொதுமன்றில் சிவகாம வல்லி உன்றன்
தயவுடையார் எவரெனினும் தாங்குபவள் நீயலவோ
தனிப்பெரிய மலைமகளே நெல்லை மாதே
தனக்குவமை இல்லாத தையலென விளங்கிடுவாய்
தகுதிசால் இறைவனுக்குத் தார மானாய்
கயமுகனின் தாயானாய் பாற்கடலான் தங்கையானாய்
கைவாளை மறைத்தான்மேல் காத லானாய்
காம்பரிந்த மலர்த்தோளாய் கற்புடைய மாதரசி
கயிலைவாழ் மலைமகளே காக்கும் தேவி
மயர்வகல மதிவளர மதிசூடி மகிழ்மயிலே
மனதுவைத்துக் காப்பாற்று மானே தெய்வ
மாமயிலே உன்னடிகள் தலைவைத்தோம் அருளென்னும்
மழைபொழிவாய் அம்புயமே அழகே வாழி

(காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்)

# ஆசியுரை

## சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

எந்தப் பொருளும் முழுமையாகமுழுத்தூய்மையாக இருப்பதில்லை இறைப்பொருளைத் தவிர. ஹால்மார்க் தங்கம்கூட 99.6 KDM என்றே அழைக்கப்படுகிறது. பிற உலோகம் கலப்பில்லாது தங்கம்கூட பயன்படாது என்பது முன்னோர்கள் அனுபவம்.

அதுபோலமனிதக் குணங்களிலும் மூவகைக் குணங்கள் சொல்லப்படுகின்றன. அது சத்துவம், ரஜஸ், தமஸ் ஆகும். எந்த மனிதனுடைய பண்புகளும் இந்த மூன்று வகைக்குணங்களின் கலப்பைக் கொண்டதாகத்தான் இருக்கக்கூடும். இறைநிலை அடைகின்ற நிலையில்தான் தூய சத்துவம் சித்திக்கும். அதே போல நல்லவர்கள் தீயவர்கள் என்ற பாகுபாட்டிலும் முழுமையான தீயகுணங்கள் கொண்டவர்களோ, நிறைவான நற்குணங்கள் படைத்தவர்களோ இருப்பதில்லை.

சாதரணமாக தூய்மையான நீரில் நுண்ணிய கிருமிகள், பாக்டீரியாக்கள் இருக்கும். அவைகள் நம் கண்ணுக்குத் தெரியாது... ஆனால் அதுகலங்கல் நீரோடுகலக்கின்ற பொழுது கலங்கள் நீரே முழுமையாக நம் கண்ணுக்குத் தெரியும்.

அதே போல நம் பழக்கவழக்கங்களையும் நம் முன்னோர்களும், நன்னெறி நூல்களும் சொல்வது போல் நாம் நம்மை அமைத்தக் கொள்வது நல்லது.

நம்முடைய வேண்டாதகுணங்கள் இந்த நல்ல பழக்கங்களாலே மறைந்துவிடும். அதே நேரத்தில் நம்முடன் சேருகின்ற நண்பர்களின் குணம், கெட்டநடத்தைக் கொண்டவையாக இருந்தால் நம்முடைய குணங்கள் அவ்வாறே மாறுவதற்கு ஏதுவாகும்.

எனவே நல்ல நண்பர்களைத் தெரிந்து அறிந்து நட்புக்கொள்ள வேண்டும். சந்தர்ப்பவசத்தால் குணங்கெட்டவர்களோடு பழகினால் உடனடியாக அவர்கள் குணம் தெரிந்தவுடனே நாம் விலகிவிடவேண்டும். இல்லையென்றால் ஏற்படும் இழப்புமிகவும் பெரிதாக இருக்கும்.

உதாரணமாக ஏறுதழுவுதல், அல்லது ஜல்லிக்கட்டுபோராட்டம் நல்ல பண்புள்ள, நேர்மையான மாணவர்களால் நடத்தப்பட்டு ஏழு நாட்கள் காந்தீயநெறிப்படி அறவழிப் போராட்டமாக நடந்து உலகையே வியந்து பார்க்கச் செய்தது. நேர்மையற்ற, சுயநலமிக்க, பிறர்ச் சொத்திற்கு ஆசைப்படுகின்ற அரசியல் வாதிகளுக்கு அச்சத்தையும், பதற்றத்தையும் கொடுத்தது. அதுபொறுக்கமுடியாதவிஷமிகள் தங்களுடைய கூலிப்படைகளையும் ரவுடிகளையும் போராட்டக் களத்தில் கலக்கச் செய்து அதனை முழுமையாக கூவமாக மாற்றினார்கள். கொச்சைப் படுத்தினார்கள்.இந்தப் போராட்டத்தின் விளைவாக தொடர்ந்து நேர்மையுள்ள, தன்னலமற்ற, சமுதாய நலம் கருதுகின்ற நல்லவர்களும், இளைஞர்களும் ஒன்று கூடிகளங்கம் நிறைந்த உள்ளங்களை முறியடிக்க வேண்டும்.

இந்த அறப்போராட்டத்தைத் தொடங்கி தமிழகத்திற்கும், இந்தியாவிற்கும் ஒரு மறுமலர்ச் சியை ஏற்படுத்துவோம். எனவே நல்ல பண்புடையவர்கள் தீயபண்பு கொண்டவர்களை நெருங்கிவிடாமல் தங்களைப் பாதுகாத்துக் கொண்டுதங்களைச் சார்ந்த சமுதாயத்திற்கு பயனுள்ள குடிமகனாகச் சேவை செய்ய வேண்டும்.

*ஆசிர்வாதங்கள்!*

*ஸ்ரீ சற்குருநாதன் துணை*

## சித்த ஞானம் (தொடர்ச்சி)

(காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர். நா.மீனவன்)

மனம் என்பது சிந்தனை பிறக்கும் களம். இந்த மனத்தில் இருந்து கிளம்பும் எண்ணங்கள் பலதரப்பட்டவை. பெரும்பாலும் மனிதன் மனத்தைத் தன்வயப்படுத்தி எளிதில் அடக்க இயலாதவன். மனத்தினை அடக்கத் தெரிந்தவனே யோகி. அஃதற்றவன் போகி; தறிகெட் டோடும் குதிரைக்கு உறுதி என்னும் கடிவாளமிட்டு ஓங்கி இழுத்தால் ஓட்டம் அடங்கி நாம் செலுத்தியபடி ஓடும். சிலருக்கு வயப்படும் மனக்குதிரை சிலருக்குக் கட்டுப்படுவதில்லை. ஆகையால் அந்த மனத்திற்கு அறிவுரை கூற முற்படுகிறார் பட்டினத்தார். உனக்குத் தெரியாத கலையில்லை. பலகலைகளையும் அறிந்த நீ அரிய தவமுடைய தூயவர்பாற் சென்றும் உண்மை யாதென்று தெளிந்தாயில்லை. உலகிலே உள்ள மூங்கிலைப் போன்ற தோளுடைய பெண்கள்பால் காமம் கொண்டு அவ்விகாரத்திலேயே அழுந்தி வெளிப்பட வழியின்றிப் பேய் போல விழிக்கின்றாயே மனமே! இது என்ன பைத்தியக் காரத்தனம்? என்று பாடுகிறார்.

***ஆயாய் பலகலை ஆய்ந்திடும் தூய அருந்தவர்பால்***
***போயா கிலும்உண் மையைத்தெளிந் தாயில்லை இப்பூதலத்தில்***
***வேயார்நத தோளியர் காமவிகாரத்தில் வீழ்ந்தெழுந்திப்***
***பேயா விழிக்கின்றனை மனமே என்ன பித்துனக்கே?***

என்று கேட்கிறார்.

மனமே! உலகில் பயன்தரும் சிலசெய்திகள் உள்ளன. அவற்றைப் புரிந்து கொள்ள முயல்க; அடியவர் உறவும் சிவனுக்குச் செய்கின்ற வழிபாட்டில் விருப்பமும் பக்தியும் அன்றி இவ்வுலகில் வேறு பயன்கள் உளவோ? நான்முகன் படைத்த நம்முடைய உறவும் மனைவி மக்களும் வாழ்வும் ஆகிய இவையெல்லாம் குயவன் செய்த மட்பாண்டங்கள் தடிபட்டு உடைவதுபோல் என்பதைத் தெரிந்து இன்னும் உலகமாயையில் சேராது இருக்கிறார்கள்.

*அடியார் உறவும் அரன்பூசை நேசமும் அன்புமன்றிப்
படிமீதில் வேறு பயனும் உளதோ? பங்கயன் வகுத்த
குடியான சுற்றமும் தாரமும் வாழ்வும் குயக்கலங்கள்
தடியாலடியுண்ட வா(று) ஒக்கும் என்(று) இனம் சார்ந்திலரே*

மனமே! உன்னிடம் எவைகளெல்லாம் உள்ளன? என்பதை நீ தெரிந்து கொண்டாயா? உன்னுடைய நான் எனது என்கின்ற ஆணவமே செல்வமாக இருக்கின்றது. கோபம் ஒன்றே தானியக் களஞ்சியமாக இருக்கின்றது. ஆணவமாகிய அரண்மனை. இவ்வுடல் கந்தல்துணி. இப்படி இருக்கின்ற உனக்கு இறைஞானம் எப்படிப் பலிக்கும்.

*ஆங்காரம் பொக்கிஷம் கோபக் களஞ்சியம் ஆணவத்தால்
நீங்கா அரண்மனை பொய்வைத்த கூடம் விண் நீடிவளர்
தேங்கார் பெருமதில் காமவிகாரம் இத்தேகத்தின்
பாங்காம் உனைப்பணிந்து எப்படி ஞானம் பலிப்பதுவே?*

பல பிறவிகள் எடுக்கின்ற தொழில் உனக்கு ஓயாத பணி ஆகிவிட்டது. அதற்காக ஏங்கி ஏங்கி வருந்துகின்ற நெஞ்சே! அழியாத பெரும்பதவியைப் பெற விரும்பும் நெஞ்சே! அதற்கான மருந் தொன்று உள்ளது. சொல்கிறேன் கேள்! ஆதி அந்தம் இன்றி என்று தோன்றியவன் என்ற தன்மை அறியாதவனாய் மழு என்ற ஆயுதத்தையும் மானையும் கரத்தில் ஏந்தியவனாய் பெரிய விடை வாகனம் ஏறியவனை என்று மனத்திலே சிந்தித்து, கண்களில் நீர் பெருக நீ அழுதால் உன் ஓயாத பிறவிப்பிணி நீங்கும் என்கிறார் பட்டினத்தார்.

*ஒழியாப் பிறவி எடுத்(து) ஏங்கி உழல்நெஞ்சே
அழியாப் பதவிக்(கு) அவுடதம் கேட்டி அநாதியனை
மழுமான் கரத்தனை மால்விடை யானை மனத்தில்உன்னி
விழியால் புனல்சிந்தி விம்மிஅழு தன்மை வேண்டும் என்றே*

உலகிலே உள்ள அனைத்து விதமான நோய்களுக்கும் மருந்துள்ளது. அனைத்து விதமான பிரச்சனைகளுக்கும் தீர்வு உள்ளது. ஒரு நாய் கருக்கொண்டால் அதற்கும் மருந்து உள்ளது.

ஆனால் பேய்க்கு ஞானம் எடுபடாது. பெரிய காஞ்சிரங்காயை உண்டாக்கயாரால் இயலும்? அதனை உண்பவர்தாம் யார்? அதுபோல் உடம்பு தீக்கிரை ஆவதன்றி எதற்கு உதவும்? ஆதலால் நாம் கடைத்தேறுவதற்கான வழியைப்பார் என்று நாம் அதாவது நம் உயிர் கடைத்தேற வழி ஆதியைத் தொழுதல் என்ற அவ்வையின் வாக்குத்தான்.

*நாய்க்கொரு சூலும் அதற்கோர் மருத்துவம் நாட்டிலுண்டே*
*பேய்க்கொரு பிடிபடுமோ? பெருங்காஞ் சிரங்காய்*
*ஆக்குவர் ஆர்? அருந்துவர் ஆர்? அதுபோல் உடம்பு*
*தீக்கிரை ஆவதல்லால் ஏதுக்கு ஆம்? இதைச்செப்புமினே.*

பட்டினத்தார் கூறும் பல பாடல்கள் மனத்துக்குக் கூறியனவாகவே அமைந்துள்ளன. தொடர்ந்து அதே அமைப்பில் பாடல்கள் வருகின்றன. கச்சு வைத்துக் கட்டி மறைத்து வைத்துள்ள தனங்களையுடைய மாதர்மேல் கடைக்கண் வைத்துக் கிடக்கின்ற ஏழை நெஞ்சமே! இமவான் பெற்றெடுத்த பச்சைப்பசுங்கொடியாகிய உண்ணாமுலையை இடப்பக்கத்திலே கொண்ட அண்ணாமலையார் திருவடிமேல் மனம் வைத்துக் கிடத்தல் ஒரு காலத்திலும் தவறாக மாட்டாது. அதாவது

*கச்சில் கிடக்கும்கனதனத் தில்கடைக் கண்கள்பட்டே*
*இச்சித் திருக்கின்ற ஏழைநெஞ்சே! இமவான்பயந்த*
*பச்சைப் பசுங்கொடி உண்ணா முலைபங்கர் பாதத்திலே*
*தைச்சுக் கிடந்தால் ஒருகாலும் தவறில்லையே.*

என்பது பாடல். அடுத்தபாடல் ஒருபடி மேலே போகிறார். மான் போன்ற விழிமாதர்களின் மையலைக் கடந்து கரையேறி வந்தவன் நான். என்னை அரசனாக்கிக் குடியேற்றிக் கொண்டவன். எனக்கு அதனாலே எந்தக் குற்றமுமில்லை. எங்கே போனாலும் சோறு. இது எனக்குக் கிடைத்த நற்பேறு. பொய்யில்லை என்பதை உணர்ந்து கொள். ஆனாலும் இந்த ஊனுடம்போடு இருப்பது அருவருப்பே. அறிவற்ற நெஞ்சே! உனைப்போன்ற பித்தர்கள் இவ்வுலகில் இல்லை. சற்றாகிலும் உன் தகுதியை நீ அறிந்தாய் இல்லை. அப்படி இருந்தாலும் தன்னை அறிந்தவர் சொல்லும் சொல்லையும் கேட்க மாட்டாய். உனக்கு வழிகாட்டும் குருவையும் நீ வழிபட மாடாய். ஆகையால் நீ பித்தனே.

*சுற்றா கிலும்தன்னைத் தான் அறியாய்தனை ஆய்ந்தனரை*
*உற்றா தலும்உரைக்கப் பொருந்தாய் உனக்கான நிலை*
*பற்றாய் குருவைப் பணியாய் பரத்தையர்பாலில் சென்றுதான்*
*பெற்றாய் மடநெஞ்சே! உனைப்போல் இல்லை பித்தனுமே.*

உளியால் செய்த கல்லையும் சாந்தையும் அழுக்கு நீங்கப் புளி கொண்டு விளக்கிய செம்பையும் நான் போற்ற மாட்டேன். (அதாவது கற்சிலை சாந்தாற் செய்த சிலை செம்பு என்ற உலோகத்தினால் செய்த சிலை) இவற்றுள்ளே இறை உள்ளான் என்று அடைத்து வைத்தேன். இனிமேல் ஒன்றும் வேண்டிலேன். சிலைகளிலெல்லாம் கடவுள் இல்லை. அவன் நம் இதயத்தில்தான் உள்ளான் என்பதே இதன் உட்பொருள்.

*உளியிட்ட கல்லையும் ஒப்பிட்ட சாந்தையும் ஊத்தையறப்*
*புளியட்ட செம்பையும் போற்றுகிறேன் உயர் பொன் எனவே*
*ஒளியிட்டதான இரண்டுள்ளே இருத்துவது உண்மையென்று*
*வெளியிட்டடைத்து வைத்தேனிமேல் ஒன்றும் வேண்டிலனே.*

இறைவன் தன்னுடைய அடியவர்களுக்காக எவ்வளவு துன்பங்களை அனுபவித்தான்? சாக்கிய நாயனாருக்காக அவர் எறிந்த கல்லைத் தன்மேல் ஏற்றுக் கொண்டான். மார்க்கண்டனுக்காக எமன் காலால் உதையுண்டான். அருச்சுனனுக்காக அவன் கைவில்லால் அடிபட்டான். தேவர்களுக்காக முன்னாளில் கடலில் தோன்றிய ஆலகால நஞ்சை உண்டான். இவ்வாறு செய்தவன் சிரித்துப் புரமெரித்தான். இத்தகைய ஏகம்பவாணன் ஆகிய சிவன் புகழைச் சொல்லவும் பிறர் சொல்வதைக் கேட்கவும் செய்யாது இருப்பது எதனால்? உன் பழவினைப் பயனால்தானே? என்று வினவுகிறார் பட்டினத்தார்.

*கல்லால் எறியுண்டு காலால் உதையுண்டும் காளைகையின்*
*வில்லால் அடியுண்டும் முன்னால் விடமுண்டும் மேலளித்த*
*பல்லான் புரமெரி ஏகம்பவாணர் பாதாம்புயத்தின்*
*சொல்லால் செவியில் கேளாதிருந்தது என் தொல்வினையே.*

(தொடரும்....)

## பட்டினத்தார் பைந்தமிழ் - 4

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

*ஆதரித்த மாலும் அறிந்திலன்என்(று) அஃ(து)அறிந்தே*
*காதலித்த நாயேற்குக் காட்டுமே - போதகத்தோல்*
*கம்பளத்தான் நீள்நாகக் கங்கணத்தான் தென்புலியூர்*
*அம்பலத்தான் செம்பொன் அடி.*

என்பது கோயில் நான்மணி மாலையின் ஐந்தாம் பாடலாகும். இது முதற் பாடலில் பிரம்மா சிவனது திருமுடியைக் காணாததைக் குறித்தது போலத் திருமால் சிவனது திருவடியைக் காணாததைச் சுட்டிப் பட்டினத்தார்க்கு எளிதாகக் காணத் தகுமாறுள்ளதைக் கூறுகின்றது.

தன்முனைப்பால் எந்தச் செயலும் நிறைவேறாது என்பதையே பட்டினத்தார் பிரமனைக் கொண்டு உணர்த்தினார். திருமாலைக் கொண்டும் உணர்த்தினார். ஆனால் அன்பினால் நாடவல்லார்க்குச் சிவன் காட்சி நல்குவான் என்பதைப் பட்டினத்தார் கூறும் போது காதலித்த நாயேற்குக் காட்டுமே என்பதால் தெளிவாகிறது.

*தேடிக் கண்டு கொண்டேன்*
*திருமா லொடுநான் முகனும்*
*தேடித் தேடொணாத் தேவனை*
*என்னுள்ளே தேடிக் கண்டுகொண்டேன்*

என்பது அப்பர் வாக்கு. மாலும் பிரம்மாவும் அகத்தால் தேடாமல் புறத்தே தேடியதால் அவர்களுக்கு இறைவன் காட்சி அளிக்கவில்லையாம் என்பது கருத்து.

இங்ஙனம் பிரம்மாவாலும் திருமாலாலும் தேடிக் காணாத திருமுடியும் திருவடியும் மேல் அண்டத்திற்கு அப்பாலும் கீழ்ண்டத்திற்குக் கீழும் சென்றுள்ளதாகப் பட்டினத்தார் அடுத்த பாடலில் கூறுவதன் மூலம் சிவனே முழு முதற்கடவுள் என்பதை வலியுறுத்தியுள்ளார். அதனால் அவனே ஏழேழ் உலகை உய்யும்படிச் செய்ய

நடனமாடுகிறான் என்று கூறினார். இதைத் தான் மாணிக்க வாசகரும் ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தன் என்றார்.

சிவனது நடனம் பலவகைப்படும்; தில்லையில் ஆனந்த நடனம், திருவாலங் காட்டில் ஊர்த்துவ நடனம், மதுரையில் கால்மாறி ஆடிய நடனம், திருப்புத்தூரில் கௌரி தாண்டவம் எனக் கூறப் பெற்றாலும் பிரதோஷத்தின் போது நந்தியின் இரு கொம்புகளுக்கு இடையில் ஆடிய நடனம் குறிப்பிடத் தக்க ஒன்றாகும். அதனை நினைவுபடுத்தும் விதமாகவே பட்டினத்தார் 7ஆம் பாடலில் நஞ்சுண்ட வரலாற்றைக் கூறினார்.

உண்மையில் பிரதோஷ நடனமே ஏழுலகையும் உய்யச் செய்த சிறப்புக் குரியதாகும். பிற நடனங்களால் உலகமே உய்ந்த -தற்கானதைப் பொதுவாகவே புராணம் சுட்டினாலும் இந்தப் பிரதோஷ நடனத்தால் தேவர்களும் ஏழேழ் உலகத்தினரும் உய்ந்தனர் என்ற புராணக் கருத்தே சிறப்பாக எண்ணத் தக்கதாகும். இந்த உண்மையைப் பட்டினத்தார் பழிப்பது போல் புகழும் இலக்கண உத்தியால் சிறப்பிக்கின்றார்.

*தில்லைக் கோயில் கொண்ட செல்வரே!*
*உனதருமை தேரா விட்டீர்*
*இடமாடி இருந்தவளும் விலக்கா விட்டால்*
*என்போல்வார்க்(கு) உடன்நிற்க இயல்வ(து) அன்று*

எனச் சிவனது அறியாமையையும் சிவகாமியின் பரங்கருணைச் செயலையும் நயம்பட உரைக்கின்றார். பாற்கடலைக் கடைந்த போது நஞ்சுவந்தது. அதனைச் சிவன் எடுத்து உண்டு விட்டார். உண்டாரைச் சாக அடிக்கும் குணத்தைத் தெரிந்தும் சிவன் உண்டு விட்டார். இப்படி நஞ்சை உண்டதால் ஒரோவழி தமக்கு நேர்ந்து விட்டால் தமக்குப்பின் தம்மோடு ஒப்பார் உலக ஆன்மாக்களுக்குக் கிடைப்பரோ? என எண்ணிப் பார்க்காமல் அவசரப்பட்டு நஞ்சை உண்டு விட்டாரே! என வியப்பதைத்தான் பட்டினத்தார் உனதருமை தேரா விட்டீர் என்ற தொடரால் சிறப்பித்தார். இது பழிப்பதுபோல் இருந்தாலும் சிவனது செயலைப் புகழ்ந்ததாகவே கருதப்படும்.

ஏனெனில் நல்ல வேளையாகப் பக்கத்தில் இருக்கும் உமாதேவியானவள் சிவனது கண்டத்திலே தங்குமாறு செய்யா விட்டால் என் போன்றோர் பிழைக்க முடியுமோ? என உமாதேவியாரின் பரங்கருணையை வியக்கின்றார் பட்டினத்தார். வானோர் தஞ்சம் உண்டு ஆயம் கருதி நஞ்சுண்டீரே? என்ற தொடரில் உள்ள நஞ்சு உண்டீரே என்றதில் உள்ள ஏகாரம் வெளிப்படையாய்ப் பழிப்பது போலவும் குறிப்பாகப் புகழ்வது போலவும் உள்ளதாகும்.

வானவர்கள் தஞ்சமாகச் சிவனிடம் புகலிடம் வேண்டியதால் அவ்வானவர் கூட்டத்தை (ஆயம்)பிழைக்கச் செய்ய வேண்டும் எனக் கருதி நஞ்சுண்டாராம் என்பது கருத்து. இங்ஙனம் சிவன் நஞ்சுண்டமையால் உலகம் காப்பாற்றப்பட்டது. இல்லையேல் உலக உயிர்கள் யாவும் காளிக்கு இரையாக அழிந்திருக்கும் என மாணிக்கவாசகப் பெருந்தகை

*தான்புக்கு நட்டம்*
*பயின்றிலனேல் தரணியெலாம்*
*ஊன்புக்க வேற்காளிக்கு*
*ஊட்(டு)ஆம்காண் சாழலோ*

எனக் கற்பித்தார்.

அடுத்து 8 ஆம்பாடலில் பட்டினத்தார் தாம் நன்குணர்ந்த நிலையாமைக் கருத்தை ஓர் உவமை மூலம் கூறுகிறார். நீர் நிலைகளில் வாழும் ஒரு பெரிய பாம்பு தவளையை இரையாகப பற்ற முயற்சிக்கின்றது. அதுபோலப் பிறப்பு என ஒருதாயின் கருவில் வினைவயத்தால் உயிர்த்ததோர் ஆன்மா தாய் வயிற்றிலிருந்து வெளிப்பட்டதும் எமனின் கட்டளையால் இறப்புக்கு ஆட்படுவது பற்றித் தெரிந்திருந்தும் தான் வயிறு வளர்ப்பதற்குப் பிற உயிர்களைக் கொன்று உண்பானேன். எனப்படர்க்கை இடமாகக் கூற வந்த பட்டினத்தடிகள் அதனைத் தன் மீதே ஏற்றிக் கொண்டு கூறுவார் போல் பல்லுயிர் செகுத்து வலிதின் அருந்தி அயர்ந்தனை என்கிறார். இங்ஙனம் உணர்த்தியதில் ஓர் உண்மை சுட்டப்படுகிறது.

பெரிய பாம்பு சின்னப் பாம்பைப் பற்றச் சின்னப் பாம்பு தவளையைப் பற்றுகின்றது. இதில் சின்னப்பாம்பு ஒன்றை நினைக்கத் தவறியதால் அடுக்கடுக்கான குற்றம் தொடர்ந்தது. குனியக் குனியக் குட்டுபவனும் அக்குட்டை வாங்கியவன் தனக்கும் கீழே உள்ளவனைக் குட்டுவதும் உலகியலின் தொடர் குற்றமாக உள்ளது. என்னை ஏன் குட்டுகிறாய்? எனக் கேட்பதும் நாம் ஏன் பிறரைக் குட்ட வேண்டும்? எனத் தனக்குள் கேட்டுக் கொள்வதுமான அறிவுத் தெளிவிருந்தால் உலகம் ஞானம் பெறும் என்பது கருத்து.

இப்பேருண்மையையே பட்டினத்தார் இலாவகமாக உவமை மூலம் உணர்த்தினார். இங்ஙனமாகிய ஆராய்ச்சி அறிவு இல்லாததால்தான் தில்லையம்பலக் கூத்தனைப் பாடுதலும் பரவுதலுமான செயலைச் செய்யாமல் அயர்ந்தேன் என உலகியலைத் தன் மீது ஏற்றிக் கொண்டு கீழ்வருமாறு அருமையாகப் பாடினார். என்னே! பட்டினத்தார் உயிர்கள் மீது கொண்ட வாஞ்சை!

*நஞ்சுமிழ் பகுவாய் வெஞ்சின மாசுணம்*
*தன்முதல் முருக்க நெல்முதற் சூழ்ந்த*
*நீர்ச்சிறு பாம்புதன் வாய்க்கெதிர் வந்த*
*தேரையை வவ்வி யாங்கு யான்முன்*
*கருவிடை வந்த ஒருநாள் தொடங்கி*
*மறவா மறலி முறைபிறழ் பேழ்வாய்*
*அயில்தலை அன்ன எயிற்றிடைக் கிடந்தாங்கு*
*அருள்நனி யின்றி ஒருவயி(று) ஓம்பற்குப்*
*பல்லுயிர் செகுத்து வல்லிதின் அருந்தி*
*அயர்ந்தனன் இருந்தது போதும் பெயர்த்துநின்று*
*எண்டோள் வீசிக் கண்டோர் உருகத்*
*தொல்எயில் உடுத்த தில்லை மூதூர்*
*ஆடும் அம்பலக் கூத்தனைப்*
*பாடுதல் பரவுதல் பணிதலோ இலனே!*

பெரிய மாசுணம்(பாம்பு) சின்னப் பாம்பின் வாலைப் பிடிக்க அச்சின்னப் பாம்பு தப்பித்தாலும் தேரையைப் பற்றி உண்ண முயற்சிக்கும்.

அதுபோலப் பிறவிப் பிணியாய் ஒருதாய் வயிற்றில் கருவாகும் ஓர் ஆன்மா தாய் வயிற்றில் இருந்து பிறந்ததும் இறப்புக்கு உத்தரவாதம் பெற்ற சூழலில் எமனின் அச்சுறுத்தலுக்கு ஆட்படுவதை அறிந்திருந்தாலும் உயிர்களைக் கொன்று தின்னும் அறியாமையை என்? என்பது. இதுவே பாடலின் மையக் கருத்து.

இத்தகு அறியாமை ஆகிய உணர்வைத் தான் பெற்றதாகப் பட்டினத்தார் கற்பித்துக் கொண்டு பாடியதால் அம்பலக் கூத்தனைப் பாடுதல்பரவுதல் பணிதலோ இலன் எனக் கூறிக் கொள்கிறார்.

ஆக எதையும் ஏன்? என்று கேள் என வற்புறுத்தும் உலகியலை ஆன்மீகக் குரலாகக் கேட்க வைக்கிறது. இந்த எட்டாம் திருப்பாட்டு.

*(தொடரும்....)*

## மடாலய நிகழ்வுகள்

23.12.2016 அன்று நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியின் முதல் பட்டமளிப்பு விழா நிகழ்ந்தது. அழகப்பா பல்கலைக் கழகத் துணைவேந்தர் முனைவர் சொ.சுப்பையா மாணவர்களுக்குப் பட்டங்கள் வழங்கிச் சிறப்புரையாற்றினார். 69 மாணவர்கள் பட்டம் பெற்றனர்.

### கோவிலூர் மடாலயத்தில் ஆசிரியர்களுக்கு ஆங்கிலம் கற்பிக்கப் பயிற்சி

26 & 27.12.2016 அன்று மாணவர்களுக்கு ஆங்கிலத்தை எளிதாகப் பேசவும், எழுதவும் கற்பிக்கும் முறை குறித்து இரண்டு நாள் பயிற்சி முகாம் கோவிலூர் ஆண்டவர் கலையரங்கத்தில் நடைபெற்றது. கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களும், கற்பிப்போம் கல்வி அறக்கட்டளையும் இணைந்து நடத்திய இப்பயிற்சி முகாமில் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேல்நிலைப்பள்ளி, முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் தொடக்கப்பள்ளி, காரைக்குடி கேந்திரிய வித்யாலயம், தேவகோட்டை லோட்டஸ் ஏ.என்.வெங்கடாசலம் செட்டியார் பள்ளிகளைச் சார்ந்த 90 ஆசிரியர்கள் பயிற்சி பெற்றனர்.

பெங்களூரில் இருந்து வருகை தந்த திருமதி.சித்ரா ராமகிருஷ்ணன், திரு. வைரவன் ராமமூர்த்தி ஆகியோர் ஆங்கிலத்தைக் கற்பிப்பதற்கான கற்பிக்கும் சாதனங்களை ஆசிரியர்களே உருவாக்கிப் பயிற்றுவிக்கும் முறை குறித்துப் பயிற்சி அளித்தனர். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் பயிற்சி முகாமைத் தொடங்கி வைத்தார். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் பயிற்சியாளர்களைக் கௌரவித்து வாழ்த்துரை வழங்கினார். முகாமிற்கான ஏற்பாடுகளைக் கோவிலூர் மடாலயப் பள்ளிகளின் முதல்வர்கள் திருமதி.மணிமொழிமோகன்,திருமதி.மணிமொழி முருகன், சேவுகன் அண்ணாமலை கல்லூரி கணிதப்பேராசிரியர் கண்ணன் ஆகியோர் செய்திருந்தனர்.

24.12.2016 அன்று பேராசிரியர் நா.சுப்பிரமணியன் அவர்கள் இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் திருமூலர் என்னும் தலைப்பில் உரையாற்றினார்.

## கோவிலூர் செட்டிநாடு அருங்காட்சியகத்திற்கு மாற்றுத்திறனாளிகள் வருகை

05.01.2017 அன்று உலக மாற்றுத்திறனாளிகள் தினவிழாவினை முன்னிட்டு அனைவருக்கும் கல்வி இயக்கத்தின் கல்லல் ஒன்றிய வட்டாரவளமையத்தின் கீழ் இயங்கிவரும் மையங்களில் பயிலும் மாற்றுத் திறனாளி மாணவர்கள் இன்று கோவிலூர் மடாலயத்தில் செயல்பட்டு வரும் செட்டிநாடு அருங்காட்சியகத்துக்கு வருகை புரிந்தனர். கல்லல், கோவிலூர், வைரவன்பட்டி, தளக்காவூர், மானகிரி ஆகிய ஊர்களில் செயல்பட்டு வரும் பகல்நேரப் பராமரிப்பு மையத்தில் பயிலும் 6 முதல் 14 வயது முடிய உள்ள மாணவ மாணவியர் 35 பேர் அருங்காட்சியகத்தைப் பார்வையிட்டனர். மனநலம் குன்றிய செவித்திறன் குறைந்த மாணவ மாணவியர் அதிக அளவில் வந்திருந்தனர்.

செட்டிநாட்டு அருங்காட்சியகம், திருநெல்லை அம்மன் கோவில், நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரியில் உள்ள படப்பிடிப்பு நிலையம், ஒலிப்பதிவுக்கூடம் ஆகியவற்றைப் பார்வையிட்டனர்.

கல்லூரியின் தகவல் ஊடகத்துறை சார்பில் குறும்படம் காண்பிக்கப்பெற்றது. மடாலயம் சார்பில் மாணவ மாணவியருக்குத் தேநீர் சிற்றுண்டி வழங்கப்பெற்றது. கோவிலூர் மடாலயத்தின் மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர் குமரப்பன் அருங்காட்சியகப் பொருட்களை விளக்கிக் கூறினார். கல்லல் வட்டார வளமைய மேற்பார்வையாளர் உதயநேவிஸ் ஒருங்கிணைப்பாளர் அழகு ஆசிரியப் பயிற்றுநர்கள் முனியப்பன் வினிதா சிறப்பாசிரியர்கள் அண்ணாத்துரை ஹெப்சிபா முருகானந்தம் ஆகியோர் மாணவ மாணவியரை அழைத்து வந்திருந்தனர்.

## கோவிலூர் மடாலயத்தில் பொங்கல் விழாக் கோலப்போட்டி

10.01.2017 அன்று பொங்கல் விழாவை முன்னிட்டுக் கோவிலூர் மடாலயத்தின் சார்பில் கோலப்போட்டிகள். கோவிலூர் மடாலய வளாகத்தில் நடைபெற்றன. ஆரம்ப வகுப்பு முதல் கல்லூரி வகுப்பு வரையும் பொதுமக்களுக்கும் என 8 பிரிவுகளாக நடைபெற்ற போட்டியில் 300க்கும் மேற்பட்டவர்கள் பங்குபெற்றனர். கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் போட்டிகளைத் துவக்கிவைத்துப் போட்டியில் வெற்றிபெற்றவர்களுக்குப் பரிசுகளை வழங்கினார். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் பள்ளி முதல்வர்கள் திருமதி மணிமொழிமோகன், திருமதி மணிமொழிமுருகன், ஆகியோர் போட்டிக்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தனர். கல்லூரி முதல்வர்கள் டாக்டர் செல்லப்பா, டாக்டர் ரவீந்திரன், மாயாண்டி பங்கு பெற்றனர். தேவகோட்டை லோட்டஸ் வெங்கடாசலம் செட்டியார் பள்ளி ஆசிரியை திருமதி மங்கை, அமராவதிபுதூர் குருகுலம்பள்ளி ஆசிரியை திருமதி ரேவதி, லட்சுமி ஆகியோர் நடுவர்களாக இருந்து போட்டியில் வெற்றி பெற்றவர்களைத் தேர்வு செய்தனர். இங்கிலாந்து நாட்டில் இருந்து வந்த சுற்றுலாப் பயணிகள் கோலப்போட்டிகளைப் பார்த்து மாணவர்கள் திறமையுடையவர்களாக இருப்பதாகவும் கோலம் போடுவது சிறப்பாக இருப்பதாகவும் அவர்களை வியப்படையச் செய்வதாகவும் பாராட்டிக் கூறினர்.

## பரிசு பெற்றோர் விபரம் வருமாறு

பொதுமக்களுக்கான பிரிவில் அனிதா முதலிடமும், எம்.கனிமொழி இரண்டாம் இடமும், பி.கற்பகவல்லி மூன்றாமிடமும் பெற்றனர். மடாலய அலுவலர்களுக்கான போட்டியில் ஏ.கலைச்செல்வி முதலிடமும், வி.சோபனா இரண்டாம் இடமும், கே.திலகவதி மூன்றாமிடமும் பெற்றனர்.

கல்லூரிப்பிரிவில் பி.பவித்ரா, எம்.அனுசுயா, ஜி.பாகப்பியா முதல் 3 இடங்களைப் பெற்றனர். மேல்நிலைப்பிரிவில் எஸ்.ஆர்த்தி, இ.ஓவியா, எம்.ராகவி ஆகியோரும் உயர்நிலைப்பள்ளிப் பிரிவில் எம்.அரவிந்தகுமார், வி.ஈசுவரி, டி.தரணி ஆகியோரும் 6 முதல் 8ஆம் வகுப்புப் பிரிவில் எம்.ஷாலினி, எஸ்.கீர்த்தனா, எஸ்.தமிழ்ப்பிரியா ஆகியோரும் 4, 5ம் வகுப்புப் பிரிவில் எம்.வித்யாஸ்ரீ, சுப்புலட்சுமி, குருலட்சுமி ஆகியோரும் 1 முதல் 3ஆம் வகுப்புப் பிரிவில் டி.ஆர்த்தி, எஸ்.வினிஸ்கா, ரோசித் ஆகியோரும் முதல் மூன்று பரிசுகளைப் பெற்றனர்.

## கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களில் சமத்துவப் பொங்கல் விழா

12.01.2017 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் இணைந்து மடாலய வளாகத்தில் சமத்துவப் பொங்கல் விழாவைக் கொண்டாடின. கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் தலைமையில் நடைபெற்ற விழாவில் 2000க்கும் மேற்பட்ட மாணவர்களும், 230 ஆசிரியர், அலுவலர்களும் பங்கு பெற்றனர். ஒவ்வொரு கல்வி நிறுவனங்களின் சார்பில் தனித்தனி பானை, கரும்பு, மஞ்சள் கொத்துடன் பொங்கல் வைக்கப்பெற்றது. மாணவ மாணவியர் பலர் பாரம்பரிய உடை வேட்டி சேலை அணிந்து வந்திருந்தனர். துவக்கப்பள்ளி மாணவர்கள் பலர் வேஷ்டி அணிந்து வந்திருந்தனர். பள்ளி மாணவ மாணவியரின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது. நிறைவாக, பொங்கல் படைத்து அனைவருக்கும் சர்க்கரைப் பொங்கல் வழங்கப்பெற்றது. மாணவ மாணவியர் உற்சாகத்துடன் பங்கேற்றனர். கோவிலூர் மடாலய கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர்.குமரப்பன் கல்வி நிலையங்களின் முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, டாக்டர். ரவீந்திரன், மாயாண்டி, திருமதி. மணிமொழிமோகன், மணிமொழி முருகன் ஆகியோர் பங்கேற்றனர்.

# அதிமதுரக் கவிகள்

## காப்பியக் கவிஞர் நற்றமிழ் நாவலர் நா. மீனவன்

**திருமலைராயனைப் புகழ்தல்**

அரசனது அவையில் இருந்த திருமலைராயனை நோக்கிய புலவர் காளமேகம் அவனைப் புகழ்ந்து ஒரு செய்யுள் பாட வேண்டுமெனும் ஆர்வத்துடன்

வீமனென வலிமிகுந்த திருமலைரா
யன்கீர்த்தி வெள்ளம் பொங்கத்
தாமரையின் அயன்ஓடிச் சத்தியலோ
கம்புகுந்தான் சங்க பாணி
பூமிதொட்டு வானமட்டும் வளர்ந்துநின்றான்
சிவன்கைலைப் பொருப்பில் ஏறிச்
சோமனையும் தலைக்கணிந்து வடவரைத்தண்
டாவாழவும் சோதித் தானே

என்று பாடினார்.

பாண்டவரில் ஒருவனாகிய வீமனைப்போல் வலிமை மிக்கவன் ஆகிய திருமலைராயன் பெற்ற புகழ் வெள்ளமானது பொங்கி எழுந்தது கண்டு தாமரையிலே வாழ்கின்ற நான்முகன் அஞ்சி ஓடிச் சத்திய லோகத்திலே புகுந்து கொண்டான். கையிலே சங்கேந்திய திருமால் பூமியிலிருந்து வானம்வரை வளர்ந்து நின்றான். சிவனோ கயிலைமலையில் ஏறிச் சந்திரனைத் தலையில் அணிந்து கொண்டு இமயமலை என்கின்ற மூங்கிலாலே ஆழத்தைச் சோதித்தான்.

இதில் திருமலைராயனை உயர்த்திப் பாடுவதற்காக அவனது வலிமைகண்டு முத்தேவரும் ஒழிந்து கொண்டனர் என்று கூறுகிறார். இயல்பில் முத்தேவரும் அவரவர் இடத்தில்தான் உள்ளனர். ஆனால் அவர்கள் ராயனுக்கு அஞ்சி ஒளிந்து கொண்டதாக உயர்வு நவிற்சியால் புகழ்கின்றார் காளமேகம். மன்னருக்கு வெற்றிக்கு உற்ற துணையாக உள்ள ஆயுதங்களைப் புகழும் மரபுப்படி காளமேகம் திருமலைராயனின் வீரவாளைப் புகழத் தொடங்குகிறார்.

### திருமலைராயனின் வாள் சிறப்பு

செற்றலரை வென்ற திருமலைராயன்கரத்தில்
வெற்றிபுரி யும்வாளே வீரவாள் - மற்றையவாள்
போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள்
ஆவாள் இவாள் ஆவாளாம்.

என்று பாடுகிறார்.

பகையால் எதிர்த்தோரைப் போரில் வெற்றிகண்ட திருமலைராயனது வாளே வீரமுடையவாள். வாள் என்று முடியும் பொருளெல்லாம் போவாள் வருவாள் புகுவாள் புறப்படுவாள் அவாள் இவாள் எனக் குறிக்கப்படும் பயனற்ற சொற்களாம்.

### காளமேகப் புலவரின் கவித்திறம்

முன்னமே அதிமதுரகவி தன் புலமைத் திறத்தைச் சொல்லிக் காட்டிய பொழுது அங்கும் தம் பெருமையை நிலைநாட்டிய புலவர் இப்பொழுதும் தன் திறமையைக் கூறத் தொடங்குகிறார்.

இம்மென்னும் முன்னே எழுநூறும் எண்ணூறும்
அம்மென்றால் ஆயிரம்பாட் டாகாதோ - சும்மா
இருந்தாலும் இருந்தேன் எழுந்தேனே ஆமாயின்
பெருங்காள மேகம் பிளாய்.

என்று பாடினார்.

இம் என்று நீர் சொல்லி முடிப்பதற்குள் 700 பாடல்கள் அல்லது 800 பாடல்கள் பாடிவிடுவேன். நீங்கள் அம் என்று சொல்வதற்குள் 1000 பாடல்கள் பாடுவேன். பாடாமல் சும்மா இருந்தாலும் இருந்தேன். பாட வேண்டுமென நினைத்தேன் ஆகில் நான் பெரிய மழை பொழின்ற கருத்த மேகம்போல் பொழிவேன். பிளாய் என்று விளித்தசொல் நீ எனக்கு ஒரு பிள்ளைபோல என்ற இகழ்ச்சிக் குறிப்பாகும்.

### எங்கே வால்?

திருமலைராயனின் அவைப்புலவரில் சிலர் காளமேகத்திடம் தாங்களே கவிராயர்கள் என்று கூறிக் கொண்டனர். அது கேட்ட காளமேகம் பாடியது இச்செய்யுள்.

வாலெங்கே நீண்ட வயிறெங்கே முன்னிரண்டு
காலெங்கே உட்குழிந்த கண்ணெங்கே - சாலப்
புவிராயர் போற்றும் புலவீர்காள் நீவிர்
கவிராயர் என்றிருந்தக் கால்.

என்பது தான் அச்செய்யுள்.

நாடாள் அரசர் மிகுதியும் போற்றுகிற புலவர்களே! நீங்கள் கவியரசர்கள் (அதாவது - கவி என்ற சொல் குரங்கு என்பதையும் குறிக்கும். கவியரசர் என்றால் குரங்குகளின் வேந்தர் என்றாகும்) என்றிருந்தால் உமக்குள்ள வால்கள் எங்கே? நீண்ட வயிறுகள் தான் எங்கே? முன்னால் இருக்க வேண்டிய இருகால்கள் எங்கே? குழிவிழுந்த கண்கள் எங்கே? என்று அவர்களை இகழ்ந்து பாடினார். குதிரை என்ற சொல் பலமுறை வருமாறு பாடியது.

கோக்குதிரை நின்குதிரை கோவன்மது ராஒன்னார்
மாக்கு திரையெல்லாம் மண்குதிரை - தூக்குதிரை
தூங்கற் கரைக்குதிரை சொக்கன் குதிரைசது
ரங்கக் குதிரைகளே யாம்.

என்று ஒருபுலவர் பலகுதிரை வரப்பாடும் என்ற போழ்து காளமேகம் இதனைப் பாடினார்.

திருக்கோவலூரைச் சார்ந்த அதிமதுர கவியே! நின் குதிரை அரசர் பவனிவரும் பட்டத்துக் குதிரை. உன்னைப் பகைத்தோரின் குதிரைகள் அனைத்தும் மண்குதிரைகள். தூதூ அவைகள் குதிரைகளா? இது மதுரைச் சொக்கநாதர் ஏறிவரும் குதிரை. அதாவது அவர் காட்டு நரிகளைக் குதிரையாக்கிக் கொண்டுவந்த குதிரை. அதாவது அவைகள் நரிகளே. பரிகள் அல்ல. சதுரங்கத்தில் நகர்த்தப்படும் குதிரையே.(அதாவதுசதுர் என்றால் நான்கு சதுரங்க விளையாட்டில் யானை மந்திரி இராணி காலாள் என்ற நால் வகைப்) (சதுரங்கப்) படைகளில் ஒன்றான குதிரை.

### மண்மாரி பொழிக இந்த வான்

பின்னர் பல புலவர்கள் சொன்ன குறிப்பின்படி காளமேகம்

எமகண்டத்தில் இருந்து பாடினார். இறுதிவரை சலிக்காமற் பாடியும் அதிமதுர கவிராயரும் தண்டிகைப் புலவர்களும் ஏன்? வேந்தன் திருமலைராயனும் அவரை மதிக்காமல் இருந்தனர். இது கண்டு சினமுற்ற காளமேகப் புலவர்

கோளர் இருக்குமூர் கோள்கரவு கற்றஊர்
காளைகளாய் நின்று கதறுமூர் - நாளையே
விண்மாரி யற்று வெளுத்து மிகக்கறுத்து
மண்மாரி பெய்கவிந்த வான்

என்று பாடினார். அவ்வாறே திருமலைராயன் பட்டினத்தில் மண் மாரி பொழிய ஊர் இருந்த இடம் மேடாகிப் போனதாகச் சொல்லுவர்.

கொலைஞர் இருக்கின்ற ஊர். வஞ்சகமாகப் பொய் கூறிப் புறஞ்சொல்லக் கற்ற ஊர். மக்கள் அனைவரும் கட்டுப்பாடின்றிக் காளைமாடுகள் போல் கத்தித் திரிகின்ற ஊர். நாளையே இந்த ஊர் வான்மழை இன்றி வெளுத்துப் பின் மிகக்கறுமை கொண்டு மண்ணே மழைபோலப் பெய்வதாக. என்பதே இதன் பொருள்.

**மண்மாரியால் வாட்டு**

மேலும் சினம் தீராத கவி காளமேகம் மற்றொரு வசை கவி பாடுகிறார்.

செய்யாத செய்த திருமலைராயன் வரையில்
அய்யா அரனே அரைநொடியில் - வெய்யதழற்
கண்மாரி யால்மதனைக் கட்டழித்தாற் போற்றியோர்
மண்மாரி யாலழிய வாட்டு

அய்யா! சிவபெருமானே! எனக்குச் செய்யக் கூடாத செயல்களைச் செய்த திருமலைராயனின் ஆட்சிக்குட்பட்ட எல்லையில் உள்ள தீயவர்களை அரைநொடிப் பொழுதில் வெய்ய நெருப்புக் கண்ணினால் மன்மதனை அழித்தாற் போல மண்மழையாலே இந்த ஊர் அழியும்படி வாட்டுவாயாக!

*(தொடரும்....)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### நடுவு நிலைமை

*அறநிலையாகிய நடுவுநிலைமை அனைவரிடத்தும் ஒப்பநிற்கும் நிலை*

**1. தகுதி எனஒன்று நன்றே பகுதியான்**
**பாற்பட்டு ஒழுகப் பெறின்.**

தகுதி - நடுவுநிலைமை ; எனஒன்று - என்னும் ஓர் அறமே; நன்றே - நன்மைபயக்கும் ; பகுதியான் - பகைவர், சுற்றம், நண்பர் என்ற பகுதிகளில் ; பாற்பட்டு ஒழுகப் பெறின் - நடுநிலை என்னும் முறைமையை விடாது நடந்தால்.

பகைவர், சுற்றம், நண்பர் என்னும் பகுதிகளில் நடுவுநிலைமை என்னும் முறைமையை விடாது நடந்தால் அந்த அறமே நன்மை பயக்கும்.

**2. செப்பம் உடையவன் ஆக்கம் சிதைவுஇன்றி**
**எச்சத்திற்கு ஏமாப்பு உடைத்து.**

செப்பம் உடையவன் ஆக்கம் - நடுவுநிலைமை உடையவனது செல்வம் ; சிதைவுஇன்றி - அழிவு இல்லாமல் ; எச்சத்திற்கு - அவனுடைய வழிவருவோர்க்கு ; ஏமாப்பு - பாதுகாப்பு ; உடைத்து - உடையதாகும்.

நடுவு நிலைமை உடையவனது செல்வம் அழிவு இல்லாமல் அவனுடைய வழிவருவோர்க்குப் பாதுகாப்பை உடையதாக அமையும்.

**3. நன்றே தரினும் நடுவுஇகந்து ஆம் ஆக்கத்தை**
**அன்றே ஒழிய விடல்.**

நன்றே தரினும் - நன்மையையே தந்தாலும்; நடுவு இகந்து - நடுவுநிலைமை தவறி ; ஆம் ஆக்கத்தை - ஆகும் செல்வத்தை ; அன்றே - அன்றைக்கே ; ஒழிய விடல் - விட்டுவிடல் வேண்டும்.

நடுவுநிலைமை தவறியதால் ஆகும் செல்வம் நன்மையையே தந்தாலும் அதனைக் கிடைத்த அப்பொழுதே விட்டு ஒழித்தல் வேண்டும்.

**4. தக்கார் தகவிலர் என்பது அவரவர்**
**எச்சத்தாற் காணப் படும்.**

தக்கார் - நடுவு நிலைமை உடையவர் ; தகவிலர் - நடுவுநிலைமை இல்லாதவர் ; என்பது - என்று கூறப்பெறுவது ; அவரவர் எச்சத்தால் - அவரவருடைய எச்சமான வழிவருவோரை வைத்தே; காணப்படும் - அறியப் பெறும்.

ஒருவர் நடுவுநிலைமை உடையவர் நடுவு நிலைமை இல்லாதவர் என்று கூறப்பெறுவது அவரவருடைய எச்சமான வழிவருவோரின் நற்குணம், தீய குணங்களை வைத்தே அறியப் பெறும்.

**5. கேடும் பெருக்கமும் இல்அல்ல நெஞ்சத்துக்**
**கோடாமை சான்றோர்க்கு அணி.**

கேடும் - தீங்கும் ; பெருக்கமும் - நன்மையும்; இல்அல்ல - இல்லாதவை அல்ல ; நெஞ்சத்துக் கோடாமை - மனத்தின்கண் ஒருதலைக் கண்நில்லாமல் இருத்தலே ; சான்றோர்க்கு அணி - தகுதியுடையார்க்கு அழகாகும்.

ஒருவர்க்குத் தீங்கும் நன்மையும் இல்லாதவை அல்ல ; முன்னரே உள்ளனவாம் ; எனவே மனத்தின்கண் ஒருதலைக் கண்நில்லாமல் இருத்தலே தகுதியுடையார்க்கு அழகாகும்.

**6. கெடுவல்யான் என்பது அறிகதன் நெஞ்சம்**
**நடுஒரீஇ அல்ல செயின்.**

கெடுவல்யான் என்பது அறிக - யான் கொடுவேன் என்பதை அறிக ; தன்நெஞ்சம் - தனது நெஞ்சம் ; நடுஒரீஇ - நடுவுநிலைமையிலிருந்து நீங்கி ; அல்ல செயின் - நடுவு இல்லாதவற்றைச் செய்தால்.

ஒருவன் நடுவு நிலைமையிலிருந்து நீங்கி நடுவு இல்லாதவற்றைச் செய்தால் யான் கெடுவேன் என்பதை அவன் உணர்ந்து அறிய வேண்டும்.

7. கெடுவாக வையாது உலகம் நடுவாக
நன்றிக்கண் தங்கியான் தாழ்வு.

கெடுவாக வையாது உலகம் - உலகத்தார் வறுமை என்று கருதமாட்டார்கள் ; நடுவாக - நடுவு நிலைமையின் நின்று ; நன்றிக்கண் - நன்மை செய்யும் தன்மையில் ; தங்கியான் தாழ்வு - தங்கியவனின் தாழ்வினை.

நடுவு நிலைமையில் நின்று நன்மை செய்யும் தன்மையில் தங்கியவனின் தாழ்வினை உலகத்தவர் தாழ்வாகக் (வறுமையாக) கருத மாட்டார்கள்.

8. சமன்செய்து சீர்தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபால்
கோடாமை சான்றோர்க்கு அணி.

சமன்செய்து - தன்னைச் சமனாக வைத்து ; சீர்தூக்கும் - பொருளைச் சமனாக எடுத்துக் காட்டும் ; கோல்போல் அமைந்து - துலாக்கோல் போல அமைந்து ; ஒருபால் கோடாமை - ஒருபக்கமாகக் கோடாமை ; சான்றோர்க்கு அணி - நடுவு நிலைமை கொண்ட சான்றோர்க்கு அழகாகும்.

தன்னைச் சமனாக வைத்துத் தன்னிடம் வைக்கப் பெறும் பொருளையும் சமனாக எடுத்துக் காட்டும் துலாக்கோல் போல அமைந்து ஒருபக்கமாகக் கோடாதிருத்தலே சான்றோர்க்கு அழகாகும்.

9. சொற்கோட்டம் இல்லது செப்பம் ஒருதலையா
உட்கோட்டம் இன்மை பெறின்.

சொற்கோட்டம் - சொல்லில் கோடுதல் ; இல்லது - இல்லாததே ; செப்பம் - நடுவு நிலைமையாகும் ; ஒருதலையா உட்கோட்டம் - ஒருபக்கமாக மனத்தின்கண் கோடுதல் ; இன்மை பெறின் - இல்லாதிருந்தால்.

ஒருபக்கமாக மனத்தின்கண் கோடுதல் இல்லாதிருந்தால் சொல்லினும் கோடுதல் இல்லாததே நடுவுநிலைமை ஆகும்.

10. வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்.

வாணிகம் செய்வார்க்கு - வாணிகம் செய்பவருக்கு ; வாணிகம் - வாணிகம் ஆகும் ; பிறவும் தமபோல் - பிறருடைய பொருளையும் தம்முடையது போல ; பேணி - கருதி ; செயின் - செய்தால்.

பிறர்பொருளையும் தம்முடைய பொருள் போலக் கருதிச் செய்வதே வாணிகம் செய்பவருக்கு வாணிகம் ஆகும்.

*(தொடரும்...)*

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### எழுகடல் அழைத்தது

சோமசுந்தரப் பெருமான் பாண்டியத் திருக்கோலம் பூண்டு அனைத்துலகினையும் குளிர்வெண்குடையால் நிழல் தந்து அறவழி பிறழாது ஆண்டு வந்தார். அந்த நாட்களில் ஞானசாஸ்திரத்தின் அரும்பொருளை உணர்ந்து ரிஷிகளும், தூயமுனிவராகிய தவப்பெரியார்களும் முறைப்படி பெருமானைக் கண்டு வருவார்கள். அவ்வாறே வேதமுணர்ந்த கௌதமுனிவர் சுந்தரப்பெருமானைச் சந்தித்துத் திரும்புங்கால் காஞ்சனமாலையின் திருமனையை அடைந்தார். காஞ்சனமாலை அவரை எதிர்கொண்டழைத்து பொன்னிருக்கையிலே அமர்த்தி வணங்கி, பரமசிவத்தின் அடியவரே ! பிறப்புத் தொடர்பு ஒழிக்கவல்ல தவத்தினைக் கூறி அருள வேண்டும் என விண்ணப்பித்தார். கருணை முனிவர் திருமுக மலர்ந்து, அருஞ்சிறப்பினையுடைய காஞ்சன மாலையே ! தடாதகைப் பிராட்டியின் தாய் நீ, சிவபெருமானே நினது மருமகன். உனக்குத் தெரியாத தவமா வேறு ஒருவர் அறிவார்? இருந்தாலும் சொல்கிறேன்.

மானசம், வாசிகம், காயிகம் எனத் தவம் மூன்று வகைப்படும். தானதருமத்திலே எண்ணம் நாட்டல், உயிர்களிடத்து அன்பு கொள்ளல், பிறர் செய்த தீமை பொறுத்தல், உண்மை உரைத்தல், மோனத்தமர்ந்து சிவத்தைச் சிந்தித்தல் புலன்களை அடக்குதல்

முதலியனவே மனத்தால் செய்யப்படும் மானசம் ஆகும். பஞ்சாக்ஷர மந்திரத்தை ஜபம் செய்தல், உருத்திர மந்திரங்களை ஓதுதல், தோத்திரப் பாடல்களைப் பாடுதல், தருமங்களை எடுத்துரைத்தல், வாக்கால் செய்யப்படும் வாசிகம் ஆகும். சிவபெருமானைப் பூசித்தல், திருக்கோவிலை வலம் வருதல், இறைவன் சன்னதி சென்று வணங்குதல், பல திவ்ய க்ஷேத்திரங்களுக்கும் சென்று வருதல் கங்கை முதலிய தொலைவிலுள்ள புண்ணிய நதிகளுக்குச் சென்று ஸ்நானம் செய்தல் முதலியன உடம்பால் செய்யப்படும் காயிகம் ஆகும். இந்த முத்தவங்களுக்கும் காயிகம் சிறந்தது. அதனுள் கங்கை முதலான நதிகளுக்குத் தனித்தனியே சென்று நீராடுதல் சிறப்புடையது. அப்புனித நதிகள் எல்லாம் வந்து சங்கமமாகும் கடலில் நீராடுதல் எல்லாவற்றிலும் மிகவும் சிறந்தது என்று மொழிந்தார்.

கௌதம முனிவர் மொழியைக் கேட்ட காஞ்சனமாலை கடல் நீராடப் பெருவிருப்பம் கொண்டாள். தன் செல்வப் பதல்வி தடாதகை தேவியிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்தாள். உடனே பிராட்டியார் தமது தலைவர்பால் சென்று, குண்டோதரனுக்காக அன்றொரு நாள் அன்னக்குளம் வையை நதியும் அழைத்துத் தந்தருளிய கருணையங்கடலே ! எனது அன்னை கடல் சென்று நீராட விரும்புகின்றார், என்று விண்ணப்பித்துக் கொண்டார்.

தடாதகைப் பிராட்டியாரின் திருமொழிகளைச் செவிமடுத்த சுந்தரப்பெருமான், ஒரு கடல் என்ன, ஏழு கடல்களையும் வரவழைத்து விடுவோம் என்று கூறி அவை வரும்படிக்குத் திருவுளங் கொண்டருளினார். எம் பெருமான் எண்ணிய மாத்திரத்திலே ஏழு கடல்களும் மதுரையம்பதியின் கிழக்குத் திக்கிலுள்ள ஒரு வாவியிலே ஏழு வகையான வண்ணங்களோடு வந்து பொங்கி நின்றன. பொங்கி எழுந்த ஏழு பெருங்கடல்களும் சிவபெருமான் திருவாணைப்படி வாவியில் சென்று அடங்கின. தனக்கே உரிய வெள்ளை வண்ணத்தோடு ஏழு கடல்களின் நிறங்களும் சேர அஷ்டமூர்த்தியாகிய சிவபெருமானை நிகர்த்து எண்வகை வண்ணங்களோடு விளங்கியது.

*(தொடரும்....)*

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**